Regd. No. 2970

# ஸ்ரீராமாநுஜன் -403. 404

ஆசிரியர்: P.B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

EDITOR:
*Mahamahimopadhyaya:*
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503

வருடச் சந்தா ரூ 10

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்



பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி— ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

துந்துபி வருஷம் 1982

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் - 403, 404



ஆசிரியர்:
ஸ்ரீகாஞ்சீ. மஹாவித்வான், P. B. அண்ணங்கராசாரியர்

தொகுதி 35 | துந்துபி ஹூ சித்திரை-வைகாசிமீ | பகுதி 1, 2

## பத்ராதிப ப்ரதிநிதியின் விஜ்ஞாபனம்
## ஸ்ரீ ஸ்வாமியின் பங்குனிவிசாக நன்னாள் நிகழ்ச்சி



ஏற்கனவே வெளியிட்டிருந்தபடி நேற்றைப் பங்குனித் திங்களில் "ஸ்ரீ ஸ்வாமியின் தொண்ணூற்றிரண்டாவது திருநக்ஷத்ரத் தொடக்கமான பங்குனி விசாக கோஷ்டி முன்னம் பத்துநாள் வேத பாராயண திவ்யப்ரபந்த ஸேவா கோஷ்டிகளுடனும் வித்வான்களின் உபந்யாஸங்களுடனும் நடைபெற்றது வருடந்தோறும் நடைபெறும் முறையிற் காட்டிலும் இவ்வருஷம் சிறப்பாகவே நடைபெற்றது. அருளிச்செயல் கோஷ்டிகளை மேலே சில பக்கங்களில் யாவரும் ஸேவிக்கும்படி ஸ்ரீமான் உ.வே. ஆதம்பாக்கம் கண்ணபிரான் ஸ்வாமி உபகரித்திருப்பது விசேஷம். ...



ஸ்ரீமத் பரமஹம்ஸ, திருமலை திருப்பதி
சின்ன ஜீயர் ஸ்வாமிகளும்
ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர் ஸ்வாமிகளும்



# வையங்கண்ட வைகாசித் திருநாள்

காஞ்சீபுரம் தேவப்பெருமாளுக்கு நடைபெறும் வைசாக ப்ரஹ்மோத்ஸவத்திற்கு ‘வையங்கண்டவைகாசித்திருநாள்’ என்று அநாதியானவழக்கு. நூற்றெட்டுத் திருப்பதிகளுள் எண்பத்திரண்டு திவ்யதேசங்களே ஸ்ரீவைஷ்ணவர்களான நாம் அநுபவிக்கக்கூடியவையாகவுள்ளன. மலைநாட்டிலும் வடநாட்டிலும் உள்ள இருபத்தாறு ஸ்தலங்கள் போக எண்பத்திரண்டு திவ்ய தேசங்களில் ஸம்வத்ஸரோத்ஸவமாகிய ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறும் திவ்ய தேசங்கள் முப்பது அல்லது முப்பத்தைந்து தேறக்கூடும். இவற்றுள் கோயில் திருமலை பெருமாள் கோயிலென்கிற மூன்று திவ்யதேசங்களில் நடைபெறும் ப்ரஹ்மோத்ஸவங்கள் மிக்க புகழ் பெற்றவை. ஸ்ரீ ரங்கத்தில், தை மாசி பங்குனி சித்திரை ஆகிய நான்கு மாதங்களிலும் நான்கு ப்ரஹ்மோத்ஸவங்கள் நடைபெற்று வருவன. அவ்விடத்தில் ப்ரஹ்மோத்ஸவம் ஸேவிப்பதற்கென்று வந்து கூடுகிற ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிமிதர்களாகவேயிருப்பர்கள். அவ்வுத்ஸவங்களில் திவ்யப்ரபந்த கோஷ்டியிலும் வேதபாராயண கோஷ்டியிலும் ஸாமான்ய தினங்களிற்போலவே ஸ்வாமிகள் ஸேவைஸாதிப்பர்கள், திருமலையில் புரட்டாசி ப்ரஹ்மோத்ஸவம் பெரும்பாலும் ஒன்றுதான். நவராத்ரி மஹோத்ஸவத்தோடு கூடியேவரும். சிற்சில ஸம்வத்ஸரங்களில் நவராத்ரி மஹோத்ஸவம் தனிப்படுவதுண்டு; அப்போது இரண்டு ப்ரஹ்மோத்ஸவமாகும். தேவஸ்தானத்திலிருந்து உபயவேத கோஷ்டியார்களுக்கும் விசேஷமாக ஸன்மானமளிக்கப்படுவதால் உபயகோஷ்டிகளும் புஷ்டியாகவே காட்சி தரும். காஞ்சீதேவப்பெருமாளுக்கு எப்போதும் ஒருப்ரஹ்மோத்ஸவந்தான் நடைபெறுவது. சித்திரை நக்ஷத்ரத்தில் த்வஜாரோஹணமாகி வைகாசித் திருவோணத்தில் அவப்ருதமாகும். தேவப்பெருமாளுக்கு நடைபெறும் பஞ்சபர்வோத்ஸவங்களே மற்ற திவ்யதேசங்களுக்கு ப்ரஹ்மோத்ஸவமாயிருக்குமென்று பல பெரியார்கள் ஸாதிக்கக்கேட்டிருக்கிறோம் **வையங்கண்ட வைகாசித் திருநாள்**என்கிற வயபதேசம் இன்று நேற்று ஏற்பட்டதன்று. இந்த மஹோத்ஸவத்தை ஸேவிக்கவரும் ஜனத்திரளை வையமெல்லாம் கண்டிருப்பதால் அதைப்பற்றி நாமெழுதத் தேவையில்லை.

இந்த காஞ்சீக்ஷேத்திரமானது சின்னகாஞ்சீபுரம் பெரியகாஞ்சீபுரமென்று இருவகுப்பாகவுள்ளது. இவ்வுத்ஸவத்தில் தினந்தோறும் இரண்டுவேளைகளிலும் வாஹனப்புறப்பாடுகள் பெரியகாஞ்சீபுரம் வரையில் நடைபெற்றுவருவது உலகமறிந்தது. பெரியகாஞ்சீபுரத்திற் கெழுந்தருளாமல் சின்னகாஞ்சீபுரத்தளவிலே

இவ்வுத்ஸவம் நடைபெற்றுநிற்குமாகில், பலபல நாடுகளிலிருந்து ஸேவிக்கவரும் ஜனத்திரள் பெரும்பாலும் இவ்வுத்ஸவ ஸேவையை இழந்தேபோகவேண்டிவரும். சின்னகாஞ்சியிலும் பெரியகாஞ்சியிலும் எத்தனை வீதிகளுண்டோ, அத்தனைவீதிகளிலுமன்றோ வெளியூர் ஸேவார்த்தி ஜனங்கள் தங்கிப்போகின்றனர். அத்தனை ஜனங்களுக்கும் ஆஹாரத்திற்கு அருமையில்லாதபடி பற்பல விடங்களில் பற்பல ஜாதியர்க்கும் போஜனஸௌகரியங்களை ஆங்காங்குள்ள பெருந்தகையாளர்கள் ஏற்படுத்திவருகிறார்கள். ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகளுக்கு ஒருசிரமமும் இல்லாத



ஸ்ரீ ஸ்வாமியின் பங்குனி விசாக மஹோத்ஸவக் காட்சி



படிக்கு சின்னகாஞ்சீபுரத்திற்குள் ஐந்தாறு இடங்களில் ததீயாராதனைகள் நடத்தப்பட்டு வருகின்றன. திருவல்லிக்கேணியில் வாழும் ஸ்ரீமான் உ.வே. K. V. ஸ்ரீநிவாஸன் முதலானவர்கள் பற்பல பெரியார்களின் உதவியைக் கொண்டு கீழண்டைமாடவீதியில் V. V. V. பாடசாலையில்பத்துநாளும் இரண்டு வேளைகளிலும் நடத்திவருகிறார். சென்னை க்ரோம்பேட்டை ஸ்ரீ உ.வே. T. ஸுந்தரம் ஸ்வாமி ஸ்ரீ ரங்கராஜ வீதியில் லைப்ரெரி ஆஸ்தானத்தில் தினப்படி பூரிதக்ஷிணையோடுங்கூட நடத்திவருகிறார். மற்றும் சில பல இடங்களுமுண்டு

ரைல்பாதை ஏற்படாத முற்காலத்திலும் பலபல ஸம்ஸ்தானங்களிலிருந்து ராஜாக்களும் ஜமீன்தார்களும் இவ்வுத்ஸவம் ஸேவிப்பதற்கென்றே வந்து திரள்வர்களாம். மைஸூர் ராஜா, கத்வால் ராஜா, வனபர்த்திராஜா, ஜடப்ரோல்ராஜா நூஜிவீடு ராஜா, மைலவரம் ராஜா, பொப்பிலிராஜா பிடாபுரம் ராஜா, ......... என்றிப்படி பலராஜாக்கள் தவறாதுவந்து கொண்டிருப்பார்களாம். அவர்கள் தங்கும் வீதிக்கு ராஜவீதியென்றே பெயர் இன்றைக்கும் வழங்கி வருகின்றது. அந்தவீதிகளில்தான் இப்போதும் உத்ஸவவைபவம் காணலாகிறது. ஆகவே வையங்கண்ட வைகாசியுத்ஸவமென்ற வ்யபதேசம் இத்திருநாளுக்கு மிகமிக ஏற்கும்.

3—6—82 முதல் இந்தத்திருநாள் நடைபெற்றது.

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

பலர் சந்தா செலுத்தாமல் பத்திரிகை கிடைக்கவில்லை; என்ன காரணம் என்றெழுதுகிறார்கள். மற்றும் பலர் தாம் ஜீவியச்சந்தா செலுத்தியிருப்பதாக எழுதுகிறார்கள். எல்லார்க்குமாகத் தெரிவிப்பதாவது:- ஜீவியச்சந்தா ஏற்றுக்கொள்வதில்லையென்று ஸ்ரீ ராமாநுஜனில் இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்னமே பிரசுரம் பண்ணியிருக்கிறோம். ஆகையால் இனியாரும் ஜீவியச் சந்தா செலுத்தியிருக்கிறோம் என்று எழுதக்கூடாது. 1982 ஆம் வருடம் ஜனவரி மாதத்திலிருந்து சந்தா செலுத்தியவர்களையே சந்தாதாரர்களாகக் கொள்வோம். 1981 ஷ ஜூன் மாதத்திலிருந்து சந்தா செலுத்தியவர்கள் எழுதிக்கொள்ளலாம். கவனிப்போம். சமீபகாலத்தில் தபால் கட்டணங்கள் மிக மிக உயர்த்தப்பட்டுள்ளன என்பதை யாவருமறிவர். இத்தகைய பத்திரிகைகளுக்கு இரண்டு பைசா ஸ்டாம்பு அனுமதிக்கப்பட்டிருந்ததும் ரத்து செய்யப்பட்டு விட்டதாகக் கேள்விப்படுகிறோம். அதற்காக வருடச்சந்தா பத்து ரூபாய் என்பதை மாற்றக் கருதவில்லை. பத்திரிகையாசிரியர்களுக்கும் பரிசிதர்களான வித்வான்களுக்கும் வழக்கப்படியே (இனமாகவே)



ஸ்ரீ ஸ்வாமி பங்குனி விசாக மஹோத்ஸவக் காட்சி

அனுப்பிவருவோம். தங்கள் அசக்தியைத் தெரிவித்து இனமாக அனுப்பித்தர வேணுமென்று விரும்புபவர்களுக்கு அனுப்பப்பார்க்கிறோம்.

# மற்றோர் அறிவிப்பு

பலர் ஸ்ரீ ராமாநுஜன் புராதநஸஞ்சிகைகள் விலைக்குக் கிடைக்குமாவென்று கேட்கிறார்கள். அவைபெரும்பாலும் செலவாகிவிட்டபடியால் கிடைப்பது அரிதே.

# வடநாட்டுத் திருப்பதிகளைப்பற்றி

ஆழ்வார்கள் தென்னாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்தருளின முறை வேறு, வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்தருளின முறை வேறு அதாவதென்னெனில், சோழநாடு பாண்டியநாடு நடுநாடு தொண்டைநாடு மலைநாடுகளில் அர்ச்சையாகக் கோயில் கொண்டிருக்கிற எம்பெருமான்களையே பாடினர். வடநாட்டிலோ வென்னில் விபவாவதாரஸ்தல மென்று கொண்டே மங்களாசாஸனம் நிகழ்ந்திருக்கின்றது. மூதலிப்போமிதனை. அயோத்தியிலும்



விருந்தாவனத்திலும் காணும் ஸன்னிதிகள் புராதனமல்லவே, நைமிசாரணியத்தில் காணும் கோயில் அதிநவீனம். இத்தலப்பாசுரங்களில் 'நைமிசாரணியத்து ளெந்தாய்' என்று பாட்டுத்தோறும் ஸம்போதனம் காண்கையாலே அர்ச்சாரூபியான ஒரு பகவானைக்குறித்துப் பாடின பதிகம்போல் தோன்றும்' அரண்ய ரூபியாக ஸேவைஸாதிக்கும் பகவானைத்தான் விளித்துரைத்த தென்பது நிஸ்ஸந்தேஹம். த்வாரகையில் அர்ச்சாரூபியான பகவான் ஸேவைஸாதிப்பதும் ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகுதான் ஆண்டாள் ஆய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின் பாண்டிவடந்தென்னையுய்த்திடுமின் பொய்கைக்கரைக் கென்னையுய்த்திடுமின் பத்தவிலோசனத்துய்த்திடுமின் கோவர்த் தனத்தென்னையுய்த்திடுமின் என்றது போலவே சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக் கென்னையுய்த்திடுமின் என்று மருளிச்செய்தாள்.

திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்து முதற் பதிகத்தில் பலபாசுரங்களில் வடமதுரைப்பிறந்தான் என்றிருக்கவும் ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றும் பிரகரணத்தில் நம்மாழ்வார் பாடின திவ்யதேசங்களை ஒன்றுவிடாமல் நிர்தேசித்து அவ்வவற்றில் விளங்கும் திருக்குணங்களைப் பேசிவருமடைவில் வடமதுரையைத் தொடாமலே போனது அது அர்ச்சாவதாரமன்று என்கிற திருவுள்ளத்தினாலன்றோ கலியன் திருப்பிரிதியையும் ஸ்ரீ பதரிகாச்ரமத்தையும் பாடினதும் அர்ச்சையில் நோக்காகவன்று. வதரியில் இப்போது காணும் ஸன்னிதி திருமங்கையாழ்வார் காலத்திலிருந்ததில்லை யென்பதைப் பண்டே விமர்சித்து முடித்திருக்கிறேன். கண்டமென்னுங்கடிநகரில் மட்டும் புருடோத்தமனடிமேல் தங்கியவன் பால் செய் தமிழ்மாலை என்று கூறியிருக்கையாலே இங்கு அர்ச்சைத் திருமேனிக்கே மங்களாசாஸன மென்பது நிஸ்ஸந்தேஹம்.

# அற்புதமான ஸந்தேஹபரிஹாரங்கள்

ஸ்ரீ ஸுதர்சநசதகமென்கிற ஸ்தோத்ர கிரந்தம் ஸுப்ரஸித்தமானது. அதற்குத்தனியன்

ரங்கேச விஜ்ஞப்திகராமயஸ்ய
சகார சக்ரேசநுதிம் நிவ்ருத்தயே.
ஸமாச்ரயேஹம் வரபூரணீம் ய:
தம் கூர நாராயண நாமகம் முநிம். என்பது

இதன் பொருளாவது:- ரங்கேசவிஜ்ஞப்திகர ஆமயஸ்ய-திருவரங்கப்பெருமாளரையரது திருமேனியிலுண்டாகியிருந்த வொரு வியாதியின், நிவ்ருத்தயே நிவ்ருத்தியின்பொருட்டு, ய:- யாவரொரு கூரநாராயணமுனிவர், வரபூரணீம் அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்யக்கடவதான, சக்ரேசநுதிம் ஸ்ரீ ஸுதர்சநாழ்வான் விஷயமான ஸ்துதியை, சகார செய்தருளினரோ, தம் கூரநாராயண நாமகம் முநிம் அஹம் ஸமாச்ரயே-அந்த ஸ்ரீ கூரநாராயணஸ்வாமியை அடியேன் அடிபணிகின்றேன் என்பதாம்.

ஒரு யதாஜாதர் ஒரு வித்வானை நோக்கி இந்தத்தனியனில் சகார என்றும்சக்ரே என்றுமிரண்டுக்ரியா பதங்களிருக்கின்றனவே, எப்படி அந்வயிப்பது? இரண்டும் பரியாயமான க்ரியாபதங்கள்தானே. இந்த ஸந்தேஹம் அடியேனுக்கு நெடுநாளாக உள்ளது. பலரைக் கேட்டும் தெளிவு பிறக்கவில்லை. தேவரீர் கிருபையுடன் பரிஹரித்தருள வேண்டும் என்றார். இது கேட்ட அந்த வித்வானுக்கு ஒன்றும் தோன்றவில்லை. இந்த அல்பஜ்ஞர்க்கு என்ன ஸமாதானம் சொல்லுவதென்று சிறிது நேரம் ஆலோசித்து முடிவாகச் சொன்னதாவது இரண்டு க்ரியாபதங்களும் ஸமாநார்த்தகங்களாயிருந்தாலும், சகார- பரஸ்மைபதிரூபம். சக்ரே ஆத்மநே பதிரூபம். இந்தஸ்துதி நூலைப் பிறர்களுக்காகவும் பண்ணினர் தமக்காகவும் பண்ணினர் என்று பொருள்கொண்டால் புநருக்தி தோஷம் வாராது என்றார். இதை க்ரஹிக்கவும் அவர்க்கு மூளைகிடையாது. 'அடியேனுக்கு இப்போது பரமத்ருப்தியாய்விட்டது. ஒருபண்டிதரும் இப்படி உடனே ஸந்தேஹபரிஹாரம் செய்ததில்லை' என்று புகழ்ந்து கொண்டே சென்றார்.

## திவ்யப்ரபந்த பரீக்ஷைகள்

நாலாயிரதிவ்யப்ரபந்தங்களைப் பரிபூர்ணமாக ஓதிப்பரீக்ஷை கொடுத்து வருபவர்களைப்பரீக்ஷிப்பவர்கள் பாசுரங்களைச் சொல்லிக் கேட்பது எங்குமுள்ள வழக்கம். ஆனாலும் பரீக்ஷையில் பல பத்ததிகளுண்டு. இங்கே ஒரு பத்ததியைத் தெரிவிக்கிறோம். கேண்மின்;

ஈ எறும்பு கட்டெறும்பு புழு காக்கை குருவி குயில் கிளி முதலை தேள் பாம்பு பல்லி இச்சொற்கள்வரும் பாசுரங்களைச் சொல்லு—என்பது ஒரு பரீக்ஷை

(உத்தரம்) ஈ:- * ஈயிலைரிப்புண்டு மயங்கி (பெரியாழ்வார்)
எறும்பு:- * புற்பா முதலாப் புல்லெறும் பாதி (நம்மாழ்வார்)
கட்டெறும்பு:- * கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு (பெரியாழ்வார்)
புழு:- * வேம்பின் புழு (திருமங்கையாழ்வார்)
காக்கை:- * கரையாய் காக்கைப் பிள்ளாய் ( ,, )
குருவி:- * காலையெழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள் (நாச்சியார் திருமொழி)
குயில்:- * கூவாய் பூங்குயிலே! (திருமங்கையாழ்வார்)
கிளி:- * வளர்த்த வென்கோலக் கிளியை (நாச்சியார்)
முதலை:- * பதகமுதலை வாய்ப்பட்டகளிறு (பெரியாழ்வார்)
தேள்:- * விடத்தே ளெறிந்தாலே போல (நாச்சியார்)
பாம்பு:- * பாம்போடொரு கூரையிலே (திருமங்கையாழ்வார்)
பல்லி:- * கொட்டாய் பல்லிக் குட்டி ( ,, )

இத்தகைய பரீக்ஷைகள் மேன் மேலும் வெளிவரும்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம.
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

## கூரேச விஜயத்தைப்பற்றி விஜ்ஞாபனம்

"சிவாத் பரதரம் நாஸ்தி" என்று கையெழுத்திடவேணுமென்று பலரையும் நிர்ப்பந்தித்துவந்த கொடுங்கோலரசனான சோழனுடைய சபைக்குக் கூரத்தாழ்வான் அநிவார்யமாக எழுந்தருள நேர்ந்தபோது ஸபையில் தர்க்கிக்கையில் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்துவத்தை உபந்யஸித்தருளின ப்ரமாணயுக்திகளை ச்லோகபத்தமாக்கியிருந்தார் ஒரு வித்வான். அதுவே கூரேச விஜயமென்னும் பெயரால் வழங்கி வருகின்றது இஃது ஆழ்வானே ஸாதித்ததென்பது பொருத்தமுடையதன்று. பூருவர்களில் ஒருவரும் இதைக் கையாண்டிருக்கவில்லை அன்றியும், சுலோகங்களில் பொருத்தமற்ற சில விஷயங்களும் காண்கின்றன. ஒன்றே காட்டுவோமிங்கு. "வித்யாரண்யோஜ்ஜிதத்வாத் நமகசமகயோ:" என்றொரு ச்லோகம் காண்கிறது. "நமகசமகங்களை வித்யாரண்யர் பாஷ்யம் செய்யாமல் விட்டிருப்பதனால்" என்பது இதன் பொருள். வேதபாஷ்யகாரரான வித்யாரண்யர் ஆழ்வானுக்கு மிகவும் பிற்பட்டவர் அன்னவரை இங்கு ப்ரஸ்தாவிக்க ப்ரஸக்தியில்லை. தைத்திரீயயஜுஸ்ஸம்ஹிதையின் நாலாவது காண்டத்தில் 5, 7 ப்ரச்நங்கள் நமகசமகங்களென்பவை. அவற்றை அவர் பாஷ்யம் செய்யாமல் விட்டிருப்பதுமில்லை. மூலம் அத்யயநபரம்பரையில் அநாதியாக நிகழ்ந்து வாராநிற்க, அதை அவர்விட்டிட்டிருந்தாலும் அதனால் விஷ்ணு பாரம்யத்திற்கு ஸாதகம் ஏதுமில்லை. இத்தகைய சில விஷயங்களைக்கொண்டு கூரேச விஜயத்தில் ப்ரக்ஷேபசங்கையுண்டாகிறது ஆனாலும் அந்த க்ரந்தம் ஸ்ரீபெரும்பூதூரில் எம்பெருமானாரால் திருச்செவி சாத்தப்பட்டு வருகையாலே அது தாத்பர்ய மரியாதையில் ஒருவாறு மொழிபெயர்க்கப்பட்டு வெளியிடலாகிறது. ... ❋

## ஸ்ரீ கூரேசவிஜய வ்யாக்யாநம்

ச்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய் "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்



பத்ராதியின் பங்குனிவிசாக கோஷ்டி



சோராமே ஆள்கின்ற வெம்பெருமான்''என்கிறபடியே உபயவிபூதிநாதனை ஸர்வேச்வரன். ''ஸர்வே வேதா யத்பதமாமநந்தி'' என்றும், ''வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:'' என்றும் சொல்லுகிறபடியே ஸர்வவேதப்ரதிபாத்யனுய் தேவதாஸார்வபௌமனுயெழுந்தருளி யிருக்கிறபடியை ஸ்ரீ பராங்குச பரகால யதிவராதிகளான நம் ஆழ்வாராசார்யர்கள் அமுதிலுமாற்றவினிய திவ்யஸூக்திகளாலே ராஜபாட்டையாக்கி தாங்களநுபவித்தும் பிறர்க்கு உபதேசித்தும் போந்த நல்லடிக்காலத்திலே;

' யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய'' என்று கீதாசார்யனருளிச்செய்த கட்டளையிலே தர்மக்லாநி பிறக்கும்வழியிலே இந்த பரதேவதாபாரம்யத்தில் சில பாக்யஹீநர்களுக்கு விப்ரதிபத்தியுண்டாகி 'சிவாத்பரதரம் நாஸ்தி'' என்றெழுத்திட்டு அதற்குப் பல வைதிகோத்தமர்களின் இசைவைப் பெறவேண்டி,

செங்கோலுடைய திருவரங்கச் செல்வனுருடைய கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரராக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவர்த்தநப்ரவீணராக விளங்கிக் கொண்டிருந்த நம் ஸ்வாமி எம்பெருமானுர் ஸந்நிதியிலே ஸந்தேசம் வரவிட்டவளவிலே, ''மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் பெரியநம்பிகளுடனே மிக்க பெருஞ்சபை நடுவே யெழுந்தருளி, ''சிவாத் பரதரம் நாஸ்தி'' என்றதற்கு ''த்ரோணமஸ்தி தத: பரம்'' என்று கூசாதே கையெழுத்திட்டதுமன்றியே பரதேவதாபாரம்யத்தை பஹுமுகமாக உபந்யஸித்தருளி ஸ்ரீமந்நாராயணனே பராத்பரனென்னுமிடத்தை உபபாதித்தருளினபடியை கூரேசவிஜயமென்னும் ப்ரபந்தமுகத்தாலே நம்முன்னோர்கள் மூதலித்தருளினுர்கள். அதில் கண்ட ஸித்தாந்தஸ்தாபநக்ரமங்கள் எங்ஙனே யென்னில் –

ஸ்நாநாசமந ஸங்கல்பாதிகளில் கோவிந்தாதி திருநாமங்களே சொல்லப்படுகையாலும், வேதமோதுகையில் ஹரிபதத்தையே தொடங்குவதனுலும், ' பர்கோ தேவஸ்ய தீமஹி'' என்று ஸவித்ருமண்டல மத்த்யவர்த்தியான நாராயணனுடைய திவ்யதேஜஸ்ஸே சிந்திக்கப்படுவதாலும், ப்ரணவார்த்தம் ஸ்ரீமந் நாராயணனே யாகையாலும்,



P. B. ரங்கநாதனும் ஸ்ரீ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமியும்

பரமஸத்வஸமாச்ரயனுன இப்பெருமானுக்கே ரக்ஷணக்ரியை அஸாதாரணமாகையாலும், இவரே ஸர்வாதிகர். 'ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி'' என்கையாலும். 'ப்ராயச்சித்தாந்யசேஷாணி'' என்று தொடங்கி ''க்ருஷ்ணுநுஸ்மரணம் பரம்'' என்கையாலும் ஸகல வைதிக கர்மங்களுக்கும் ஸாத்குண்ய ப்ரதனுனவிவனே பரதேவதை. ருத்ராஹுதியில் ''அப உபஸ்ப்ருச்ய'' என்று அசுத்திபரிஹாரார்த்தமாக அபாமுபஸ்பர்சனம் விதிக்கையாலும், அந்த ருத்ரன் தானும் ×குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்ப்பெய்து கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினுனென்கிறபடியே ஸ்ரீபாத தீர்த்தத்தை வஹித்துப் புனிதனுகையாலும் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை

சக்ரவர்த்தி திருமகனுர் சிவபூஜை செய்தாரென்னுமிடம் ஸ்ரீ ராமாயணத்தில் சொல்லப்படாமையால் பொய்யேயாமித்தனை. தாமஸ புராணங்களில் சொல்லிற்று அநாதரணீயம். காசியில் ருத்ரன் ஸ்ரீராம



நாமத்தை தாரகமந்த்ரமாகக்கொண்டு ஜபித்து உய்ந்தது ஸுப்ரஸித்தம் ராமேச்வரமென்பதை திருவடியான ஹநுமானுடைய ரோமேச்வரமென்பர். அன்றியே ஸேதுரக்ஷார்த்தமாக தனது சேவகர்களில் ஒருவனுன ருத்ரனை நிறுத்தி நிய த்தருளினுனென்னவும் குறையில்லை. ப்ரஹ்மஹத்யாசாபத்தைப் போக்கி உஜ்ஜீவிப்பித்தருளினவனே பராத்பரன். ''பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியான் சாபந்தீர்த்த வொருவனே தைவமாகவுரியவன்,

வேதத்தில் நமகசமகங்கள் சிவபரமென்கை அஸம்பத்தம் அக்னிபரமென்றே பாஷ்யம் செய்தார்கள் 'ஸர்வே வேதா யத்பதமாமநந்தி' என்றும், 'வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என்றுமுள்ள ப்ரமாணகதிக்குச் சேராத வார்த்தைகள் கடலோசையோடொக்கும்.

கைலாஸயாத்ரையில் கண்ணனுக்கு சிவன் வரமளித்தானென்கை ஒரு நடநமாத்ரம் இதை ஆழ்வார், ×கள்வா வெம்மையுமேழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவவென்று, வெள்ளேறன் நான்முகனிந்திரன் வானவர் புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே× என்கிற பாசுரத்தினுல் அநுஸந்தித்தருளினுர். ''க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்'' என்று கேசவநாமமளித்த சிவனே இதில் ஸாக்ஷி.

வராஹபுராணத்தில், ''மர்த்யோ பூத்வா பவாநேவம் மாமாராதய கேசவ, மாம் பஜஸ்வ ச தேவேச வரம் மத்தோ க்ருஹாண ச. யேநாஹம் ஸர்வபூதாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோபவம்''. ×தேவகார்யாவதாரேஷு மநுஷ்யத்வமுபேயிவான் த்வாமேவாராதயிஷ்யாமி என்றதை மெய்ப்பிக்கவேண்டிகண்ணன் சிவனைவணங்கிற்று. அவதாரத்தில்மநுஷ்யபாவனையின் மெய்ப்பாட்டுக்குச்சே, தேவதாபித்ருகுருப்ரப்ருதிகளான மனிசர்களையும் வணங்குவதில் வருவதொரு ஹாநியில்லையிறே சிவனுடைய அபராவதாரமான அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ரத்தினுல் மாண்ட பரீக்ஷித்தைத் தன் திருவடிஸ்பர்சத்தினுல் பிழைப்பூட்டிய பெருமானே பெருமானுவன்.

ஆயிரம் கமலங்களைக்கொண்டு சிவனை யர்ச்சித்து பகவான் திருவாழியாழ்வானைப் பெற்றதாகச் சொல்லுமது தானும் கல்பனை. சக்கரம்



முந்துற எழுந்தருளியிருப்பவர் ஸ்ரீ ஜகத்குரு காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி

நித்யமானதென்னுமிடம் ருக் யஜுஸ் ஸாம வேதங்களில் விசதம். பாஞ்சஜந்யத்தின் உத்பத்திபோல் சக்ரத்தின் உத்பத்தியும் அவதார விஷயம். சூலாயுதம் பெறுவதற்காக சிவன் ஆயிரம் செண்பக மலர்களைக் கொண்டு ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்தனனென்றும் அதில் குறையுற்ற புஷ்பத்திற்காகத் தன் மூக்கையரிந்து ஸமர்ப்பித்து நிறைத்தனனென்றும் பகவச்சாஸ்த்ரங்களிலே சொல்லிவைத்தது. சக்கரத்தில் நின்றும் சூலமுண்டாயிற்றென்றது அகஸ்த்ய ஸம்ஹிதை, சூலத்தை மயன் செய்தானென்றும் சொல்லிவைத்தது. சிவபுரியான காசி சக்கரப் படையினால் எரிந்தொழிந்தது.

சிவன் த்ரிபுரதஹநம் செய்தானென்பதும் பகவச்சக்தி விசேஷ ப்ரயுக்தமென்று வேதத்திலும் மஹாபாரதத்திலும் வ்யக்தம். வேதத்திலே 'தேஷாமஸுராணாம் திஸ்ர: புர ஆஸந்..........ருத்ரோ வை க்ரூர:



ஸோஸ்யத்விதி'' என்றவிடத்திலே ''விஷ்ணும் தேஜநம்'' என்று ஓதிற்று மஹாபாரதத்திலே, ''விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ:, தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:'' என்று ஸுஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தது. தைத்திரீயாரண்யகத்திலே, 'தஸ்யேந்த்ரோ வம்ரிரூபேண தநுர்ஜ்யாமசிநத் ஸ்வயம்...... சிர உத்பிபேஷ'' என்று சிவன் தலையறுப்புண்டானென்றது

புருஷோத்தமனென்றும் புராணபுருஷோத்தமனென்றும் ப்ரஸித்தனான ஸ்ரீமந்நாராயணன் மோஹிநீவேஷம் பூண்டது நாடகங்களில் பெண்வேடமணியும் க்ரமத்திலே சேரும் கீதாசார்யன் ''திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்'' என்று அர்ஜுனனுக்கு திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்துக் காண்பித்தருளின விச்வரூபத்திலே பல க்ஷுத்ர க்ரிமி கீடங்களோபாதி சிவனும் ஒரு வ்யக்தியாக நின்றொழிந்தமை அவிசால்யம் சிவனை உபாஸிப்பவர்களே உலகில் அதிகமாகக் காணப்படுகிறார்களென்பதும் வெள்ளி தங்கம் முதலியவை மிகவும் வருந்தியும் காணவரிதாயிருக்க, மண்ணும் கல்லும் எங்கும் நிரம்பியுள்ளன என்னுமாபோலேயாமத்தனை.

வேதவ்யாஸர் ''உத்த்ருத்ய புஜமுச்யதே'' என்று கைதூக்கிச் சொன்னது வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி ந தைவம் கேசவாத் பரம்'' என்றிறே வேதங்களில் பலபுடைகளிலே ருத்ரன் ''அஹமேவ பசூநாமதிபதிரஸாநி'' என்றாப்போலே வரம்வேண்டினாப்போலே ஓரிடத்திலும் ஒருவர் பக்கலிலும் விஷ்ணு வரம் வேண்டினதாக ஓதிற்றில்லை. மாறாக ''அக்நிரவமோ தேவதாநம் விஷ்ணு: பரம:'' என்று விஷ்ணுவின் பாரம்யத்தை முக்தகண்டமாகவும் சொல்லிற்று.

'கேநோபாயேந லகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம் பட்யதே' என்று கேட்ட பார்வதிக்கு 'ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாம தத் துல்யம் ராமநாம வராநநே'' என்று நிர்லஜ்ஜமாக பரமார்த்தமுணர்த்திய ருத்ரன் பக்கலிலே பாரம்யசங்கைக்கு அவகாச லேசமுமில்லை

கிம் பஹுநா? ''ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:'' என்று உபநிஷத்தில் ஸந்தேஹவிபர்யயங்களுக்கு இடமின்



றியே சொல்லிவைத்தது அவற்றின் ஸாராம்சங்களைத் திரட்டி ''காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவர்'' என்றும், ''திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு'' என்றும், ''முண்டனீறன் மக்கள் வெப்புமோடியங்கியோடிடக் கண்டு நாணி வாணனுக்கிரங்கினானெம்மாயனே'' என்றும், *சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்'' என்றும் நம் ஆழ்வார்கள் அப்ர த்ருஷ்யமாக அறுதியிட்டருளினார்கள்

இவ்வரியபெரிய அர்த்த விசேஷங்களையெல்லாம் நம் ஸ்வாமி எம்பெருமானாருடைய திருவடி நிழலிலேயிருந்து கேட்டருளின நம் கூரத்தாழ்வான் தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோலவும் கடல் வாய்ச்சென்று மேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்ப்படநீர்முகந்தேறி யெங்கும் குடவாய் படநின்று மழை பொழிந்தாப்போலவும் ராஜஸபையிலே உபந்யஸித்தருளி தர்சநோத்தாரகராக எழுந்தருளியிருந்தபடி.



அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய பூர்வே
மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு,
ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்த்தாம்
யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:.

ஆழ்வான் திருவடிகளே சரணம்

ஸ்ரீரஸ்து
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# திவ்யப்ரபந்தங்களிற் காணும் உபமானங்கள்

நாலாயிர திவ்வியப்பிரபந்தங்களில் உபமானமிட்டும் உத்ப்ரேக்ஷித்தும் கூறப்படும் விஷயங்கள் திருப்பல்லாண்டிலிருந்து திருவாய்மொழியளவாகத் திரட்டப்படுகின்றன (பத்ராதிபர்)

## 1 *அபிமான துங்கன் செல்வனைப்போல*

திருப்பல்லாண்டில் எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடத் தொடங்கிய பெரியாழ்வார் தாமொருவராகப் பல்லாண்டு பாடி த்ருப்தி பெருமல் முமுக்ஷுக்களையும் கைவல்யார்த்திகளையும் ஐச்வர்யார்த்திகளையும் அழைக்க, அவர்கள்வந்துசேர அவர்களோடுங்கூடி மங்களாசாஸனம் செய்தருளுகிருரென்றுள்ளது முடிவில் ஐச்வர்யார்த்தியின் மங்களாசாஸனப் பாசுரம் *அல்வழக்கொன்றுமில்லாவென்பது. இதில் செல்வநம்பி யென்கிற மஹான் உபமானமாகக் கூறப்படுகிருர். விஷ்ணு சித்தரைப் பெரியாழ்வாராக ஆக்கினவர் அந்த மஹானேயென்பது சரித்ர ஸித்தம். அவர் திருக்கோட்டியூரில் திருவவதரித்தவராதலால் *அணிகோட்டியர் கோன்* எனப்பட்டார். மேல் பெரியாழ்வார் திருமொழியில் (4-4-) *நாவகாரியமென்கிற திருக்கோட்டியூர்ப் பதிகத்தில் (8) *நளிர்ந்த சீலன் நயாசலன் அபிமானதுங்கனை நாடொறும் தெளிந்த செல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்* என்றருளிச் செய்ததுங் காண்க. மேலும் கேண்மினன்பர்காள்! *உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்கிற ஸ்ரீவிஷ்ணுபுராண



பங்குனி விசாக மஹோத்ஸவ கோஷ்டியின் ஒரு பகுதி

வசனத்தின்படி ப்ரஹ்லாதாழ்வான் ஸாதுக்களுக்கெல்லாம் உபமான பூமியாயிருந்ததுபோல செல்வநம்பியும் ஸ்ரீவைஷ்ணவோத்தமர்களுக்கெல்லாம் உபமான பூமியாயிருந்தாரென்பது அறியலாகிறது நெடுங்காலம் க்ஷுத்ர பலார்த்தியாயிருந்து இன்ருக வந்து பணிந்த (ஐச்வர்யார்த்தியான) இவ்வதிகாரி திருத்துழாய்போலே இயற்கையான பக்தி பரிமளம் பூண்ட செல்வநம்பியைத் தனக்கு உவமை கூறுதல் பொருந்துமோ? எனின்; பெருவிலையனுன ரத்னம் நெடுநாள் சேற்றிலே யழுந்திக் கிடந்து ஒளிமழுங்கியிருந்து ஒருநாள் சேறுகழுவினவாறே இயற்கையான வொளியைப் பெற்று அனர்க்க ரத்னங்களோடொக்க எண்ணப் பெறுவது காணு நின்றேமன்றே ஆசார்ய ஹ்ருதயத்தில் ''ஒன்று கூடினதாய்ப் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியேனென்னும தொன்றுமே ஒழிக்க வொழியாதது'' என்ற சூர்ணை வியாக்கியானத்துடன் இங்கு ஸேவிக்கத்தக்கது.



## 2 ✻சீதக்கடலுள்ளமுதன்ன தேவகி✻

பெரியாழ்வார் திருமொழி 1-2-1 ×சீதக்கடலுள்ளமுதன்னதேவகி× என்பதில் ஸ்ரீக்ருஷ்ண சிசுவை யசோதைப் பிராட்டி பக்கலிலே அனுப்பி வைத்த தேவகிப் பிராட்டி ''சீதக்கடல் உள்ளமுதன்ன தேவகி'' எனப்பட்டாள் இப்பதிகத்திலேயே மேலே ×திருவின் வடிவொக்கும் தேவகி பெற்ற' என்னுமிடத்துத் தேவகியை ஸ்ரீமஹாலக்ஷ்மியோடு ஒத்தவளாகச் சொல்லியிருப்பதற்கேற்ப இங்கும் தேவகிக்கு லக்ஷ்மியோடு ஸாம்யமே சொல்லப்படுகிறது. சீதக்கடலின் உள்ளமுது ஸ்ரீ மஹாலக்ஷ்மி; அவளையொத்தவள் தேவகி-என்றதாயிற்று. தேவர்களுக்காகக் கடல் கடைந்த காலத்தில் இரண்டு அமுதம் தோன்றியது; ஒன்று புறவமுது; மற்ருென்று உள்ளமுது. புறவமுது அமரர்கள் கைக்கொண்டனர்; உள்ளமுதை வங்கக்கடல் கடைந்த மாதவன் கொண்டனன் ×விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே× என்ருர் திருமங்கையாழ்வார் ''மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்'' என்ற நாச்சியார் பாசுரத்தில் 'மதுரக்கொழுஞ்சாறு' என்பதற்கு ஸ்ரீமஹாலக்ஷ்மியென்று பொருள் கொண்டார் கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் ''உததிக மந்தராத்ரி மதிமந்தந லப்தபயோ மதுரரஸேந்திராஹ்வஸுத ஸுந்தரதோ: பரிகம்'' என்றவிடத்து அடியேனுடைய வியாக்கியானம் காண்க. ஆக, 'சீதக்கடல் உள்ளமுது' என்றது ஸ்ரீ மஹாலக்ஷ்மியையாய் அவளைப்போன்ற பாக்யவதி தேவகி என்றதாயிற்று எம்பெருமானை வல்லபனுகக் கொள்ளப்பெற்ற பாக்யவதி அவள். அவனை மகனுகக் கொள்ளப்பெற்ற பாக்யவதி இவள். பிராட்டியைப் போலே பரோபகாரமே சீலமான தேவகி யென்றவாறு ... ... (2)

## 3 ✻முத்தும் மணியும்...தலைப்பெய்தாற்போல்✻

பெரியாழ்வார் திருமொழி 1-2-2 ''முத்தும் மணியுமென்கிற பாட்டில் ஸ்ரீ க்ருஷ்ண சிசுவின் பாதங்களிலுள்ள பத்து விரல்களும் யசோதைப் பிராட்டியினுல் வருணிக்கப்படுகின்றன நவரத்னங்களையும் மாறி மாறிப் பதித்தாற்போலே விளங்குவனவாம் திருவிரல்கள். பாட்டில் சில ரத்னங்களைச் சொன்னது நவரத்னங்களுக்கும் உபலக்ஷணம். கோமே



ஸ்ரீமான் உ.வே. P, B. A. பத்ராதிப ஸ்வாமியும்
ஸ்ரீமான் உ வே. P.B.A. அட்வகேட் ஸ்வாமியும்

தகம் நீலம் பவழம் புட்பராகம் மரகதம் மாணிக்கம் முத்து வைடூரியம் வைரம் என்பன நவரத்தினங்களாம் கால்களுக்கு இடுகின்ற செம் பஞ்சு மருதாணி யென்பன போல ஸ்ரீ க்ருஷ்ணனுடைய பாதங்களில் ஒன்பது விரல்களுக்கு நவரத்ன வர்ணத்தையும் மற்றொரு விரலுக்குப் பொன்னிறத்தையும் யசோதை இட்டு 'என் மணிவண்ணனுடைய பாதங்களில் பத்துவிரலும்-நவரத்னங்களையும் நல்ல பொன்னையும் ஒளி விளங்க மாறிமாறிப் பதித்து வைத்தாற்போலிருப்பதை வந்து பாருங்கள்'' என்று தோழிமார்களை விளித்துக் காட்டினளாயிற்று ... (3)

## 4 ❋வாரணம் பைய நின்றூர்வதுபோல்❋

பெரியாழ்வார் திருமொழி 1 7-1 'தொடர் சங்கிலிகை சலார் பிலாரென்னத் தூங்குபொன்மணியொலிப்ப, படுமும்மதப் புனல் சோர வாரணம் பையநின்று ஊர்வதுபோல் உடன்கூடிக் கிண்கிணி ஆரவா



ரிப்ப உடைமணி பறைகறங்கத், தடந்தாளிணை கொண்டு சார்ங்கபாணி தளர்நடை நடவானோ'' கண்ணபிரான் தளர்நடை நடக்கும்போது காலிலணிந்துள்ளபாதச்சதங்கை கிண்கிணென்று சப்திக்கவும், இடையிற் கட்டிய சிறுமணிகள் பறைபோலொலிக்கவும் நடக்கின்ற ஆயாஸத்தினால் உடலில் வேர்வைநீர் பெருகவும் நேருமாதலால் இதற்கு ஓர் ஏற்ற உபமானம் கூறப்படுகின்றது யானையானது மதத்தின் மிகுதியினால் கட்டுத் தறியை முறித்துவிட்டுக் காலிலிட்ட இருப்புச்சங்கிலியை யிழுத்துக் கொண்டு நடக்க, அந்தச் சங்கிலித்தொடர் சலார் பிலாரென்று ஒலிக்கவும், பொன்கயிற்றினால் கட்டித் தனது இரு புறத்திலும் தொங்கவிட்ட மணிகள் தொனிக்கவும் மதநீர் பெருகவும் பெற்று மெல்ல நடக்கும் யானை ஏற்ற உவமையாயிற்று. ... ... ... (4)

## 5 ❋வெள்ளிப் பெருமலைக்குட்டன்— கருமலைக்குட்டன்❋

பெரியாழ்வார் திருமொழி 1-7-5 ''முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடு மொடு விரைந்தோடப் பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல், பன்னியுலகம் பரவியோவாப்புகழ்ப் பலதேவனென்னும், தன்னம்பியோடப் பின் கூடச்செல்வான் தளர்நடை நடவானோ'' நந்தகோபர் திருமாளிகையில் நம்பிமூத்த பிரான் (பலராமன்) முன்னேயோட, கண்ணபிரான் அவன் பின்னே யோடுகிறபடிக்கு ஏற்ற உவமை கூறப்படுகின்றது. பலராமன் வெண்ணிறமுள்ளவனாதலால் அவன் ஓடுவது வெள்ளிமலையீன்ற குட்டி யோடுவதாகவும், அவன் பின்னே கண்ணனென்னுங்கருந்தெய்வம் ஓடுவது கருமலையீன்ற குட்டி தொடர்ந்தோடுவதாகவும் வைத்துக் கூறப்பட்டது. [மொடு மொடு விரைந்தோட நடக்கும்போது தோன்றிய விரைவின் குறிப்பு; ஒலியின் குறிப்புமாம்] ... ... (5)

## 6 ❋செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல்❋

பெரியாழ்வார் திருமொழி 1-8 ''பொன்னியல் கிண்கிணிப் பதி கத்தில் ஸ்ரீக்ருஷ்ண சிசு பருவத்திற்குத் தகுதியாக ஓடிவந்து தன்னை யணைத்துக்கொள்ளவேணுமென்று யசோதைப்பிராட்டி வேண்டிக்



கொள்ளுமாறு சொல்லுகிறது. அதில் இரண்டாம் பாட்டில் கண்ணனுடைய கூந்தல் முகத்திலே அலையும்படிக்கு ஏற்ற உவமை கூறப்படுகின்றது [செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல், பங்கிகள் வந்துன்பவளவாய் மொய்ப்ப] செந்தாமரைப்பூவில் தேனைக் குடிப்பதற்காக மொய்க்கின்ற வண்டுகளைப்போல் கண்ணனது கரியகூந்தல் வந்து பவளம்போற் செந்நிறகான வாயில் மொய்த்துக்கொள்ளுகின்றனவாம். நாச்சியார் திருமொழியில் (14-8) ''களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே'' என்ற பாசுரம் இப்பாசுரத்தை ஒருபுடையொத்திருக்கும். குழல்களுக்கு வண்டுகளை யொப்பிடுவதற்குமட்டும் (6)

**7 *மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்தவண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்.**

பெரியாழ்வார் திருமொழி 2-2-6 இப்பாசுரத்தில் உபமானோபமேய நிர்தேசமில்லையாயினும் ஒன்றரையடிகளால் உபமானங்கூறி





பங்குனி.விசாக கோஷ்டியின் ஒரு பகுதி

அதனால் ஒரு உபமேயத்தைப் பெறுவிக்கின்றார் ஆழ்வார் என்பதாக உய்த்துணரவேணும். இது ஸ்ரீவில்லிபுத்தூர் மங்களாசாஸனப் பாசுரம் இதிலுள்ள வர்ணனை என்னவென்றால்-மின்னிடையாரான பெண்களின் பரந்த கூந்தலில் வண்டு ஆசைகொண்டதாகக் கூறப்படுகிறது. இதிலிருந்து தொனிக்கக்கூடிய பொருள் யாதெனில்; *தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டென்று (திருவாய்மொழியில்) தெய்வ வண்டாகக் கூறப்பட்ட எம்பெருமான் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியெனும் ஆண்டாளுடைய கூந்தலிலே [அதாவது கூந்தலிலணிந்த மாலையிலே] ஆசைகொண்ட வரலாறு தொனிக்கும்படி காண்க. ஆக, இங்கு, மின்னனையநுண்ணிடையார் ஆண்டாள்; அவளுடைய குழல்மேல் நுழைந்தவண்டு—வடபெருங்கோயிலுடையானாகிற தெய்வவண்டு என்றதாயிற்று. (7)

(தொடரும்)

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல்துறைகள்

| | |
|---|---|
| 1 நாலாயிர திவ்யப்ரபந்த வுரைகள் | 9 வேதவிசாரலக்ஷண நூல்கள் |
| 2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த .. | 10 லோகாபிராம உபந்யாஸ .. |
| 3 ஸகலபூர்வாசார்ய தோத்ர .. | 11 பரபக்ஷப்ரதிக்ஷேப .. |
| 4 ஆழ்வாராசார்யப்பிரபாவ நூல்கள் | 12 உபந்ய ஸ ஸௌபாக்ய .. |
| 5 இதிஹாஸபுராண சரித்திர .. | 13 வடமொழி நூல்திரள்கள் |
| 6 ரஹஸ்யார்த்த விளக்க .. | 14 ஹிந்தீ பாஷையில் நூல்கள் |
| 7 வேதாந்தப் பொருள் விளக்க .. | 15 தெலுங்கு பாஷையில் .. |
| 8 ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க .. | 16 பூர்வாசார்ய சரந்த வெளியீடுகள் |

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்:

P B. ANNANGARACHARYA.
Editor, Granthamala, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக

If un-delivered please return to:

**P. B ANNANGARACHARYA.**
Kancheepuram PinCode-631503



To
Sriman V. Ethirajan B.A B.T
Head Master
Matharasa Islamia High School
ERODE 638 001

*Edited and Published by P. B. Annangaracharya Swamy*
*and Printed by E D var jan a Sri Kamakshi Press*
*44-c, Thirukatchinambi Street, Kanchipuram-631503*